# தலபுராணம் என்னும் கருவூலம் – 6

*September 3, 2010*

**- முனைவர் கோ.ந. முத்துக்குமாரசுவாமி**

***முந்தைய பகுதிகள்:***


- தலபுராணம் என்னும் கருவூலம் – 1
- தலபுராணம் என்னும் கருவூலம் – 2
- தலபுராணம் என்னும் கருவூலம் – 3
- தலபுராணம் என்னும் கருவூலம் – 4
- தலபுராணம் என்னும் கருவூலம் – 5


**தொடர்ச்சி…**

## வைதிக ஆக்கம் அல்லது மேனிலை ஆக்கம்



இந்துமதம் ஒருவரால் ஆக்கப்பட்டது அன்று. இந்திய மண்ணில் பிறந்து வளர்ந்து இந்தப் புனித மண்ணின் சிந்தனை, அறிவு, அனுபவத்தோடு ஒட்டி வளர்ந்தது இந்துமதம். பிரம்ம சத் ஒன்றே உள்ளது, காட்சிப்படுவன எல்லாம் பொய்த்தோற்றம் எனக் கொள்ளும் மதம்கூட வியவகார நிலையில் உயிர்கள் பல; அவற்றின் அனுபவமும் பக்குவமும் வேறுபட்டிருக்கும் என உடன்படுகின்றது. புலன்கடந்த ஒன்றை அறிவதிலும் அதனை அறிய முற்படும் நெறியிலும் உயிர்களின் பக்குவத்திற்கும் அனுபவத்திற்கும் ஏற்ப வேறுபடுதல் இயல்பே. எனவே, இந்துமதத்தில் இயற்கை வழிபாடு, நீத்தார் வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு, பல உருவ வழிபாடு என வழிபடுநெறிகளும், அவற்றிற்கு உரிய தோத்திரங்களும் மந்திரங்களும் பல்கிக் காணப்படுகின்றன.. சமுதாய அமைப்பு, தொழில், கல்வி , செல்வம் முதலியன ஒருவருடைய கடவுள் பற்றிய சிந்தனை மற்றும் வழிபாட்டுநெறிகளைக் கொண்டு செலுத்துகின்றன எனலாம்.

மேலோட்டமாகப் பார்க்கின்றபொழுது காணப்படுகின்ற வேற்றுமைகளினூடே, ஆழ்ந்து உற்று நோக்குபவருக்கு, இவற்றிடையே ஏதோ ஓர் இயைபு அல்லது ஒற்றுமை, நெருக்கம் ஊடுருவி இருப்பது தெற்றெனப் புலனாகும். அந்த ஒற்றுமை ஒருவரால் செயற்கையாகச் செய்யப்பட்டதன்று. இந்து சமுதாயத்தின் பல்வேறுவகைப்பட்ட சமய, வழிபாட்டுநெறிகளுக்கூடே உயிரோட்டமாக ஊடுருவி

நிற்கின்ற அந்த ஒற்றுமையை இந்துத்துவம் அல்லது பாரதியம் என்போம். உயிரோட்டமான இந்துத்துவத்தின் வெளிப்பாடாகப் புறத்தோற்றத்தில் *பாமரம்-வைதிகம், வேத்தியல்-பொதுவியல், பெருமரபு-சிறுமரபு, உயர்மரபு-இழிமரபு* என்னும் இரட்டைகள் காணப்படுகின்றன.

வெளித்தோற்றத்தில் இந்த இரட்டைகளிடையே வேறுபாடு உள்ளதுபோலக் காணப்பட்டாலும், அவை ஒன்றையொன்று தழுவியே நிற்கின்றன. பாமரம், வைதிகத்தை நோக்கி முன்னேற, வைதிகம் பாமரத்தைத் தழுவி அணைத்துக் கொள்வதை, இந்துப் பண்பாட்டின் வெளிப்பாடுகளாகிய இசை, இலக்கியம், சமயம் ஆகிய அனைத்திலும் காணலாம்.

மேலைநாட்டு ஆய்வாளர்களும் அவர்களைப் பின்பற்றிய நம் நாட்டவர்களும் பாமரம், வைதிகத்தை அல்லது வேத்தியலை நோக்கி முன்னேறுவதை– அதாவது, மேனிலையாக்கத்தை– இயல்பான இந்தப் பண்பாட்டு இயக்கத்தை, *'சமஸ்கிருத மயமாதல்', 'பிராமணீயமாதல்', 'ஆரியமயமாதல்'* முதலிய கலைச்சொற்களால் அந்நியப்படுத்திவிட்டனர்.

படிப்பறிவில்லாத பாமரமக்கள் விடியற்காலையில் தொழிலுக்குச் செல்லுமுன், கிழக்கு நோக்கிச் சூரியனை வணங்கிச் சென்றனர். நிலாக் காய்ந்தால், நிலவிலுள்ள அமுதத்தை உண்டு பயிர்கள் தழையும் என நிலாப் பொங்கலிட்டு வழிபட்டனர். கதிரடிக்கும்போது, காற்று வீசாது போனால், களத்துமேட்டில், கல் வடிவில் உள்ள '*மல்லாண்டை*' தேவதையைக் கூடையினால் மூடி, புழுங்கச் செய்து காற்றை வரவைத்தனர். கிணறு வெட்டிப் புதுநீர் கண்டபோது, அந்தப் புதுநீரைக் கடவுளாக வணங்கி, அதனைப் பயன்படுத்து முன்னர் ஊர்ப்பிள்ளையாருக்குத் திருமஞ்சனம் செய்தனர். எழுத்தறிவில்லாத இந்தப் பாமர மக்கள் செய்யும் வழிபாட்டினை வைதிகர்கள் செய்யும் வழிபாட்டில் மந்திரமாகக் காண்கிறோம்.

பாமரமக்கள் செய்த இந்த வழிபாடு வைதிகமாக மேனிலை அடைந்தபோது, இவ்வியற்கையே சிவமூர்த்தமாக மந்திரத்தால் வழிபடப்பெற்றது. சிவன் பஞ்சபூதங்களை ஆசனமாகவும் மூர்த்தமாகவும் கொண்டு தான் மூர்த்திமானாகவும் அதனைக் கடந்தும் இருத்தலைக் காஞ்சிப் புராணம்,

**பாரின் மேயினை பாரொரு வடிவினை பாரினுக் கறியொண்ணாய்**
**பாரும் மற்றையப் பாரிடைப் பொருளும்நின் ஆணையிற் பயில்வித்தாய்**
**நீரின் மேயினை நீரொரு வடிவினை நீரினுக் கறியொண்ணாய்**
**நீரும் மற்றையந் நீரிடைப் பொருளும்நின் ஆணையின் நிலைப்பித்தாய்**

**நெருப்பின் மேயினை நெருப்பொரு வடிவினை நெருப்பினுக் கறியொண்ணாய்**
**நெருப்பும் மற்றையந் நெருப்பிடைப் பொருளும் நின்னாணையின் நிறுவித்தாய்**
**மருத்தின் மேயினை மருத்தொரு வடிவினை மருத்தினுக் கறியொண்ணாய்**
**மருத்தும் மற்றையம் மருத்திடைப் பொருளும்நின் ஆணையின் வதிவித்தாய்**
*(மருத்து – வாயு)*

**விண்ணின் மேயினை விண்ணொரு வடிவினை விண்ணினுக் கறியொண்ணாய்**
**விண்ணும் மற்றையவ் விண்ணிடைப் பொருளும்நின் ஆணையின் நிறுவித்தாய்**
**கண்ணும் ஆருயிர் இருசுடர் எவற்றினும் இம்முறை கலந்தோங்கி**
**எண்ணி னாலறி வரும்பெரு முதல்வநின் இணையடி மலர்போற்றி"**
*(ஆருயிர் – புருடன், இருசுடர் – சூரிய சந்திரர்கள்)*

எனப் பாடுகின்றது. இந்தப் பாடல்களில் பாமரமக்களின் இயற்கை வழிபாடு, இறைவனின் அட்டமூர்த்த வழிபாடாக வைதிகமாகின்றது.

கொங்கு நாட்டில் பட்டிப்பொங்கலின்போது, கால்நடைகளின் கால்களைக் கழுவி, *"கால்கழுவு பட்டியாரே கால் கழுவு, உண்ணுண்ணு பட்டியாரே உண்ணுண்ணு, வாய்கழுவு பட்டியாரே வாய்கழுவு"* என்று கூறிக்கொண்டு பொங்கலை ஊட்டுவர். பாமரரின் இக்கூற்றிலும் செயலிலும் '*பாத்தியம், ஆசமனம், அர்க்கியம், நைவேத்தியம்*' ஆகிய வைதிகத்தின் அடையாளங்களைக் காணலாம்.

பாமர மக்கள் வழிபடும் சிறுதெய்வங்களும், அவற்றை வழிபடும் முறைகளும் மக்களின் பொருளாதார வாழ்க்கைப் பின்னணி, தொழில், நம்பிக்கை முதலியவற்றின் அடிப்படையிலேயே அமைகின்றன. 'சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம், சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்' என வைதிகம் சிறுதெய்வ வழிபாட்டைப் போற்றாத போதிலும் இகழ்வதில்லை. படிநிலையில் சிறுதெய்வவழிபாடும் வேண்டியதே; உரிய பக்குவத்தில் சிறுதெய்வ வழிபாடும் ஒருபெருந்தெய்வ வழிபாட்டுக்கு அழைத்துச் செல்லும் என வைதிகம் சிறுதெய்வ வழிபாட்டினையும் படிநிலையில் ஏற்றுக் கொள்கிறது. இந்த நெறியில் தலபுராணங்களின் பங்கு அலாதியானது. சிறுதெய்வங்களை ஏதோ ஒருவகையில் பெருந்தெய்வங்களான சிவன், சத்தி, திருமால், திருமகள் முதலியோருடன் தொடர்புபடுத்திக் கதைபுனைந்து, சிறுதெய்வங்களுக்குத் தலபுராணங்கள் ஏற்றம் தந்து விடுகின்றன. நாளடைவில் சிறுதெய்வங்களும் வைதிகக் கடவுளராகி வேதநெறியில் வழிபடத் தக்கோராக மாற்றம் அடைந்துவிடுகின்றனர்.

மழைக் கடவுளாக மக்கள் கொண்டாடும் சிறுதெய்வமான மாரியம்மனைக் காஞ்சிப்புராணம் பரசுராமருக்குத் தாயும் சமதக்கினி முனிவருக்குப் பத்தினியுமாகிய இரேணுகா தேவியுடன் ஒன்றுபடுத்தி ஒருகதையைக் கூறுகின்றது. இரேணுகை பட்ட துயர் இக்காலத்திலும் அழகும் ஒழுக்கமும் வாய்ந்த பெண்களுக்கு அரசியல் செல்வாக்குடைய செல்வக்குமாரர்களால் தொடர்வதை இக்கதை நினைவுப் படுத்துகின்றது.



இளமையும் அரசுரிமையும் ஆற்றலும் நீங்கரு மடமையும்நிறைந்த கார்த்தவீரியார்ச்சனிடமிருந்து தன் இளமனைவியாகிய இரேணுகையையும் குடிப்பெருமையையும் காப்பாற்றிக் கொள்ள வேறு வழி தெரியாமல்



சமதக்கினிமுனிவர் அவளைக் கொல்லும்படி ஆணையிட்டுப் பரசுராமரை ஏவுகின்றார். அந்த நிலையில் வலிமையற்ற ஏழைக்கு வாழ்க்கைப்பட்ட இளமையும் அழகும் வாய்ந்த பெண்ணின் அவலநிலையைக் காஞ்சிப் புராணம்,

**அல்லலே பெண்ணெனப் பிறத்தல் ஆங்கதின்**
**அல்லலே இளமையிற் சிறத்தல் ஆங்கதின்**
**அல்லலே கட்டழகுடைமை ஆங்கதின்**
**அல்லலே இரவலர் சார்பின் ஆகுதல்**
*(இரவலர் சார்பினாதல் – ஏழைக்கு மனைவியாதல்)*

என்று எடுத்துக் காட்டுகின்றது.

பரசுராமர் தந்தையின் ஆணையைக் கடவாமல் தாயைக் கொன்றுவிடுகின்றார். தாய்க்கொலை எனும் கொடிய பாவத்தைச் செய்யப் பரசுராமரைத் தூண்டிய தன் வெகுளியைச் சமதக்கினி முனிவர் நொந்து கூறுவது சிறந்த அறிவுரை.

**வெகுளியே உயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை**
**வெகுளியே குணம்தவம் விரதம் மாய்க்குமால்**
**வெகுளியே அறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்**
**வெகுளியிற் கொடும்பகை வேறொன் றில்லையால்**

கார்த்தவீரியன் செய்தி அறிந்து சமதக்கினி முனிவரைக் கொன்றுவிடுகின்றான். பரசுராமர் தந்தை கூறியபடி தாயின் தலையையும் உடலையும் சேர்த்து, அவளை உயிர்ப்பிக்கின்றார். இரேணுகை கணவனை இழந்தமையால் வருந்தி பரசுராமர் கூறியபடி காஞ்சிபுரம் வந்து ஓர் இலிங்கம் தாபித்து



வழிபடுகின்றாள். இறைவன் அம்மையுடன் எழுந்தருளுகின்றார். இரேணுகை இறைவனிடம், "ஐயனே, எண்ணிலாத துன்பங்கள் பட்ட யான், தூயநின் அருளால் மன்பதைக்கெலாம் வழிபடு தெய்வமாக விளங்க வேண்டும். அவரவர் விரும்பிய போகங்களை அவர்களுக்கு நல்கும் பேறு எனக்கு அருளவேண்டும். என்னால் தாபிக்கப்பட்டுள்ள இந்த இலிங்கத்தில் நீங்கள் என்றும் எழுந்தருளி வழிபடும் எவர்க்கும் கனிந்தருள் புரிய வேண்டும்!" என வேண்டினாள்.

இறைவனும் அவளுடைய வேண்டுகோளுக்கு இரங்கி, அவளுக்குத் தெய்வத் திருவுருக் கொடுத்து, "… எண்ணிய எண்ணியாங்கு எய்த, நண்ணி வேட்ட சால மிக்களிக்க" அருள்புரிந்தார். இரேணுகை பெற்ற தெய்வக் கோலம் மாரியம்மை எனப்படுகின்றது.



இந்தக் கதையினால் பாமரமக்களும் தத்தம் அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப உலகியல் பயன்களைக் கருதி அவர்களுடைய மனத்திற்கு உகந்த சிறுதெய்வங்களை வழிபடுகின்றனர் என்றும் அவர்கள் விரும்பிய உலகியற் பயன்களை அச்சிறுதெய்வங்கள் அளிக்கும் ஆற்றலைப் பெற்றுள்ளன என்றும் அந்த ஆற்றல்கள் அச்சிறுதெய்வங்கள் செய்த புண்ணியப் பயனாக ஒருபெருந்தெய்வத்தால் அளிக்கப் பெற்றவை என்பதும் பெறப்படுகின்றன.

எல்லையற்ற பரம்பொருளை உணரும் ஆற்றல் இல்லாத மக்கள் இரேணுகை (மாரியம்மன்) போன்ற சிறுதெய்வங்களை வழிபட்டு அவர்களின் வழி பெருங்கடவுள் அளிக்கும் நன்மையினைப் பெறுகின்றனர். அதனால் சிறுதெய்வவழிபாடும் அந்த அளவில் வேதநெறியே; இந்து மதமே.

இரேணுகை என்ற மாரியம்மன் மீது நாதஜோதி முத்துஸ்வாமி தீட்சிதர் அவர்கள், *'கன்னட பங்களா'* என்னும் அரிய இராகத்தில், *"ரேணுகா தேவி ஸம்ரட்சிதோஹம் அனிசம்.."* எனத்தொடங்கும் அற்புதமான கீர்த்தனையை இயற்றியுள்ளார். (இந்தக் கீர்த்தனையை *டி.கே.ஜெயராமன்* அவர்கள் பாடியுள்ளார். பாடலைக் கேட்க இங்கே சுட்டவும்.) இதுவும் சிறுதெய்வ வழிபாட்டை வேதநெறி நின்ற பெரியோர்கள் தழுவிக் கொண்டதற்குச் சான்றாகும்.

***(தொடரும்…)***

**குறிச்சொற்கள்:** அர்க்கியம், ஆசமனம், ஆரியமயமாதல், இந்து மதம், இந்துத்துவம், இரேணுகா தேவி, கன்னட பங்களா, கலாசாரம், காஞ்சிப் புராணம், கார்த்தவீர்யாஜுனன், கீர்த்தனை, கோயில், சக்தி, சமஸ்கிருத மயமாதல், சாதி, சிறுதெய்வ வழிபாடு, சிறுதெய்வங்கள், சிவன், ஜமதக்னி முனிவர், டி.கே.ஜெயராமன், தொடர், நாதஜோதி, நைவேத்தியம், பக்தி, பட்டிப்பொங்கல், பரசுராமர், பா த்தியம், பிராமணீயமாதல், புராணங்கள், பெருந்தெய்வ வழிபாடு, மல்லாண்டை, மாரியம்மன், முத்துஸ்வாமி தீட்சிதர், வரலாறு, வேதநெறி, வேதம், வைதிகம்

---

## 7 மறுமொழிகள் *தலபுராணம் என்னும் கருவூலம் – 6*